உ

கணபதிதுணை.

# சிவானந்தபோதம்.

இரண்டாம்பதிப்பு.



இஃது,

கோ. மாணிக்கமுதலியாரால்

**மநோன்மணிவிலாசம்**

என்னுந் தமது அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை:

1897.

இதன் விலை அணா—௨.



உ

சிவமயம்.

# சிவானந்தபோதம்.

## காப்பு.

### வெண்பா.

சிவானந்தபோதகமாஞ்சித்திமுத்திதந்து
பவானந்தமானவினைபாழாம் - நவானந்த
ஈசனேதானாகுமென்வடிவுத்தாளிணையைப்
பாசமுடன்றொழுவார்பார். (க)

தியாகரருள்போதஞ்சிவசுந்தரன்சொல்
தயாபரிவென்றுய்வடிவந்தானும் - செயாவெனவே
பொய்யாவிநாயகனும்பொற்குருவாஞ்சண்முகனும்
அய்யாவுமென்னுள்ளேயாம். (உ)

முத்திபெறுமென்னெஞ்சுமூர்க்கருடனேயிணங்கி
சித்தந்தும்பிசசிதருமன் - முத்தனும்
பட்டினத்தார்சாக்ஷிப்பகுத்தறிதலினாலேத்
தொட்டவர்க்குமுண்டாஞ்சுகம். (௩)

பணியறுத்தலாகப்பரபோகங்கொண்டு
துணிவுறுத்தநெஞ்சுக்குச்சொல்லின் - அணியாய்
படபடென்னும்னெஞ்சம்பகருசிவானந்தத்
திடமுறுவார்தானேசிவம். (௪)

சிங்காதனமுடையசெல்வவடியார்கள்
தங்காற்சிரமேற்றரித்திட்டேன் - பொன்கால்
ஏற்றிப்புகழ்ந்தன்பாலிந்நூலென்புன்கவியால்
சாற்றத்துணிந்தேன்சரண். (ரு)

---

நூற்பயன்.

விருத்தம்.

அறிவதனைமனங்கேட்கச் சிவானந்தபோதத்தை யறியநன்றாய், நெறியுடையமுத்தர்கள்தன்றிருவடியிற் பணியவருள்நிலைக்கக்காட்டிக், குறியுடனேயனுபவத்து வழியடைந்துகதிபெறவே கூறவென்றும், பிரிவறவே வாழ்ந்துசிவப்பேரானந்தம்பெருகப்பேசுமிந்நூல். (சு)

---

ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகள்துதி.

நிறைந்தபரிபூரணமாய்நிற்குணமாய்நிர்மலமாய் நித்தனாகித், துறந்தமனத்துடையோர்க்குந்துரியனுமாய தீதனுமாய்ச்சோதியாகிக், கறந்தமுலைப்பாலாகிப்பாலி லுள்ள நெய்கொட்டுங்கர்த்தனாகிச், சிறந்தகுருமாணிக்கசு வாமிகளை யெம்முளத்தில் லெழுதல்செய்வாம். (எ)

---

சமயாசாரியர்மூவர்துதி.

இசைகுருவிப்பரந்தரனே யெழுந்தருளிவேண்டிய தோரின்பந்தந்து, இலைக்குளவாயெதிர்த்தவரைமதித்

திடாச்சிவசமயமேலாய்ச்செய்து, இசைக்குளவோர்புக
ழ்ந்தேத்தச்சிவாலயத்திற்றேவாரஞ்சிறக்கவோதிப், ப
சைக்கருதியருள்பெருகுமூவரிணை மலரடியிற்பணிகின்
றேனே. (அ)

---

## பஜவண்ணர் அல்லமாப்பிரபுதுதி.

பத்திநிலைதவறுமற் கிருபையுமே வழுவாமற்பாரி
ன்மீதே, யுத்திசிவகணேசருக்குப்போதமுற்றுப் பூசை
செய்துகந்துஞானத், தத்துவமேயுணர்ந்துசிவந் தானு
கும்பஜவண்ணர்சாக்ஷாத்கார,முத்திதருமல்லமாப்பிரபீ
சரிருவர்தாள்முடிகொள்வாமே. (௯)

---

## மருத்துமலைதேசிகர்துதி.

பண்ணுமறைசாத்திரங்களாகமங்கள் விரிந்தநாற்ப
லத்திற்சென்றே, யுன்னுகின்றமனத்தாலே பிறப்பிறப்
பாம்நோய்பலவற்றுற்றிடாமற், பொன்னுடையவம்பல
வர்கழற்பணியச் சிந்தையற்றுப்பூஜைசெய்ய, வென்ன
தென்றே யெனையாண்டமருத்துமலைத் தேசிகன்றாளி
றைஞ்சுவோமே. (௧0)

---

ஸ்ரீ

# சிவானந்தபோதம்.

## நூல்.

(அறிவுக்கும்மனத்துக்கும்* வாக்குவாதம்.)

[அறிவுகூறுதல்.]

ஆனநெஞ்சமேயிமைப் பொழுதாகிலுமலைவறுத்
திருந்தாயோ, போனநாளிலேகடந்ததுமிருந்ததும் புது
மைகளறியாயோ, ஈனமாகியகவலையை நீக்கியைம்பொ
றியினிலிணங்காமல், தானமொத்துநான்சொன்மொழி
கேட்டுநீசரியென்று மகிழ்வாயே. (க)

[மனங்கேட்குதல்.]

(அவதாரிகை.) ஏதேது விபரீதமாக இருக்கிறது, இமைப்
பொழுதாகிலும் பிரியாமலிருந்த நீ யிப்போதென்னை அன்னி
யமாகக்குறித்துசொற்படி கேட்கச்சொன்னதும் சந்தோடமா
யிற்று; ஆகிலும் உதவியானகாரியமாக விருப்பிற் கேட்கவே
ண்டுந்தானே, ஆதலாற்சொல்கவென்று மனங்கேட்க வறிவு
கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

மூத்துபெறுமழகான நெஞ்சகமேபணியறுத்தன்
மொழியக்கேணீ, சத்துசித்தானந்தபராபரமேகதியெ
ன்றுஞ்சார்ந்திடாமன், முத்தர்களுமோதிவைத்தநூலத
னையாராய்ந்துமுனைந்திடாமற், பத்திநிலையில்லாமற் சிந்த
னையுமோயாமற் பார்ப்பதென்னோ. (உ)

---

* பாக்கள் அறிவுசொல்வது, வசனங்கள் மனதுசொல்வது.

[மனங்கேட்குதல்.]

(அ-கை.) ஆயினியாதோ பரத்தைச் சாரவில்லை யெனவும், நூலினுட்பொருளை யறிந்து முனைகொள்ளவில்லை யெனவும், யத்திநிலையி னிற்க வில்லையெனவும், சிந்தனைகளை யறுக்கவில்லையெனவும், சொல்கின்றனவற்றை எக்காலத்தினுமி யானறியாதவனாக விருக்கிறேன், இஃதந்தரங்கப்பாஷையாக விருக்கின்றது. மாடு, மக்கள், பெண்டீர், சுற்றம், வாணாள் முதலியனவே பொருளென்றுன்னியிருந்த வெனக்கிப்போது நிருவொன்று நான்குவகையிற் சிந்திக்கச்சொன்னீர். ஸ்பட்டமாகப்புலப்படுமாறு புகல்கவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

மாடுமக்களுஞ்சுற்றமும் பெண்டிரு மாளிகையுட்
ன்வாழ்வும், நாடுராச்சியமாண்டிடும்புகழ்ச்சியுநம்மதெ
ன்றேதேகத்தி, னூடுசென்று நீயெனதுடலியானெனவு
மூன்றலுத்திடுநெஞ்சே, வீடுவிட்டுயிரேகிடும் போதி
னில்வினைவழி நுழைந்தாயே. (௧)

[மனங்கேட்குதல்.]

(அ-கை.) தேகத்தினுள்ளேபுகுந்து மாடு, மக்கள், சுற்றம், பெண்டீர், உயர்வாழ்வு, தேசாதிபத்தியப்புகழ்ச்சி முதலியவை சதமென்றும், தேகம் நான் எனது என்று பாராட்டி உழலுகிறாயென்றும்; முடிவுகாலத்தில் வினைவழியிலே உயிரானுழைக்கிறாயென்றுஞ் சொல்லுகிறாய். நீ இதுகாறும்கூட இருந்தையா இல்லையா ? இதுகாறும்யாதும்புகலாதிருக்கவாறென்னை ? இப்போது இங்ஙனஞ் சொல்லுதற்குக் காரணமென்னை? என்றுமனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

கேணெஞ்சமேயுன்னிடவயத்திலேகிடந்துலேந்தனமின்னுள், வீணிலேபலசென்னமுமெடுத்ததின்மெலிந்திடும்போது, உன்னிலேன்னையானறியாமலேயுத்தமர்நோக்கத்தாற்,காணுமிப்படிமானிடதேகமுங் கண்டதுமறிவாயே. (ரு)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) அனேகந் திரேகத்திற்பிறந்து பிறந்திறக்கின்றதாகவுஞ்சொன்னீர், அவற்றுளிம்மானிடதிரேக மருமையாகபெரியோர் கிருபாநோக்கத்தாற்கிடைத்ததாகவுஞ்சொன்னீர், அது தெரியும்படிக்குச் சொல்லுமென மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

வேறு.

நாலுவகையோனியிலுமெழுவகையின் றோற்றத்துளினமாக, மேலுகந்தமானிடந்தானெடுப்பதுவேயருமையாய்மெய்யனுகி, பாலுபோன்மனமுடைத்தாய்புண்ணியமேமிகுந்துபவங்கீழாய்த்தள்ளி, நூலுணர்வதருமை நெஞ்சே யிருவினையிலொருவினையை நொறுக்கித்தானே. (சு)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனல் மானிடதேக மெடுப்பதருமையென்றுசொன்னீர், அதிலும் மெய்யனுகிக் கள்ளமற்று பாவம்போக்கி புண்ணியமிகுந்து நூலுணர்வதருமை யென்றுங் காட்டு

கின்றீர். அப்படியானால் மானிடதேகத்திலேதானே பலவிதமா யருமையாகிய தேகமுண்டோவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

மனிதரிலும்பறவையுண்டுவிலங்குண்டு கல்லுண்டுமரமுமுண்டு, மனிதரிலுநீர்வாழுஞ்சாதியுண்டுஅநேககுலமனிதருண்டு, மனிதரிலுமனிதருண்டு வானவருமனிதராய்வருவதுண்டு, மனிதரிலேபிறப்பறக்கவந்ததே யருமையெனவகுத்தார்முன்னோர். (௬)

[மனங்கேட்டுதல்.]

(அ-கை) ஆனால் தேக மெடுப்பது எவ்விதம்? வினையென்பது ஒன்றோ இரண்டோ? இதில் சகாயமான வினையெது? வினை வழியாய்தேகமெடுக்கிறது யாராலேயென்று மனக்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

எழுவகையின்றோற்றமாய்க் கடந்தோறும்பலவிதமாயின்பமுற்றே, பழுத்தறவே தேகம்வரும்பேய்மனமே நீசெய்தபண்பினாலே, உழிதருமிக்காலத்துமொழியாமலிருவினையாலுகந்துநிற்கும், கழிதருமிவ்விருவினையிலொருவினையைநோக்குவதுகடினந்தானே. (எ)

[மனங்கேட்டுதல்.]

(அ-கை) ஆனால் என்னாலே வினையுண்டாகிறதென்றும் வினையினாலே தேக மெடுக்கிறதென்றும் சொன்னீர், வினை

வழியாய்ப் பல யோனிதோறும் எப்படிப் புகுந்து ஜநநமரு ணமுண்டாகிறதென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

வேறு.

முனவர்க்குக்காயத்தான்மருவுஞ்செய்கை
மலர்மணம்போலுறுஜன்மமயக்கத்தாலே
இனமாக்கும்பிறவியினிலிழுத்துக்கொண்டே
யெத்தனையோஜன்மத்திலிறக்கச்செய்யும்
தனவாக்காய்பிரம்மாவுஞ்சிருஷ்டிசெய்ய
தான்றானைவளர்ந்திந்தத்கரணிமீதே
இனமாக்குவெம்பாசந்தன்னிற்சிக்கி
யிறந்தார்கள்பிறந்தார்களின்னம்நெஞ்சே. (அ)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனால் பிறந்தாலுமிறந்தாலும் வேதாகம சாத்திரச் சொற்படி நடந்தால், தேவேந்திரபதவி பிரம்மபட்ட முதலானது மடையலாமென்று சொல்லுகிறார்களே, அது சுகமல்லவோவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

வேறு.

மூந்தஜன்மமாம்புண்ணியமிகுந்திடின் முக்கியமுண்டாகும், பிந்தஜன்மமாம்பாவமேமிகுந்திடிற் பெரியதோர்துயராகும், அந்தரெண்டையுமறுத்திடிலொளிதருமரன்கழற்றுணையாகும், பந்தமானதோர் புராணங்கள்வேதங்கள்படைத்ததையறிவாயே. (கூ)

[மனங்கேட்டுதல்.]

(அ-கை) ஆனல் மும்மூர்த்திகள் பட்டமாயிருந்தாலும், தேவேந்திர புகழ்ச்சி பெற்றாலும், பின்னும் பூலோகத்திலே பிறப்பதுண்டோவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

வாழுமாலயனுருத்திரனிந்திரன்வானவரானாலும், சூழுமாயுகம்பிரளயந்தன்னிலுஞ் சுகமுடன் வாழ்ந்தாலும், தாழுமானதொல்லுலகில்வந்துறுவர்கள் தரணியோர்புகழ்ந்தேற்ற, வீழும்நெஞ்சமே யரனடிசேர்ந்திடில்வினைக்குழிவிழுந்தாயே. (க0)

[மனங்கேட்டுதல்.]

(அ-கை) ஆனல் வேதாகமபுராண சாஸ்திரங்களுண்டாக்கி வைத்தார்? அவற்றாலே என்னபிரயோசனம் என்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

நரஜன்மத்தை யெடுத்தும்பவத்தினில் நழுகிடாதிவ்வண்ணமே, திரமதாகவேயிசனுத்தரவினாற்செய்பவர் புண்ணியமென்றே, வரமுடைத்தநல்வியாசருஞ்செய்கனர்வழங்கிடுமதனாலே, பரவடியையுறுமுத்தர்களிருவினைப்பற்றறப்பார்த்தாரே. (கக)

[மனங்கேட்டுதல்.]

(அ-கை) ஆனல் ஒருவர் செய்கிற பாவபுண்ணிய மொருவருக்கு உண்டென்கிறது எவ்விதமென்று மனங் கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

வேறு.

ஒருவர்செய்தபாவபுண்ணியமொருவர்க்
குண்டென்றுசொல்லுகின்றவூமைநெஞ்சே
சருகுமவரவருயிர்க்குத்துணையார்சொல்வாய்
தந்தைதாய்ப்பெண்டுபிள்ளைதுணையுமாமோ
வருகுமந்தவியாதிகளும்வினைதானல்லோ
மக்கள்பெண்டுதந்தைதாய்வாங்கிக்கொண்டு
திருகுமவர்பின்னொருவர்க்கீந்ததுண்டோ
திருஷ்டாந்தங்கண்டுநீதெளிந்திடாயே. (௧௨)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) அப்படியானால் புராணங்களிலே ஒருவர்செய்த பாவபுண்ணியம் மற்றொருவருக்குண்டென்று பொய்சொல்ல வேண்டியதென்னவென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

பாசபந்தமானதொருமூடர்க்கிந்தப்
பற்றுதலைவையாட்டால்நம்பமாட்டார்
ஆசைகொண்டுசெய்யார்கள்விகாதஞ்செய்வார்
அதனாலேபொருத்தம்வைத்துச்சொன்னதல்லால்
நேசமிதுபோலவேபகைத்தார்யாரு
நீங்கினல்வேறுகெதிநிலத்தோர்க்குண்டோ
மோசமிதுநம்பாதேநெஞ்சேகேளு
முனைந்தவர்க்குச்செய்தபலன்முடியுந்தானே.

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனால் ஒருவர்க்கொருவர் நன்மை தின்மைக் கூட்டுறவில்லையே; அப்படியிருக்க, ஒருகுடும்பத்திலே பத்து ஜனங்களில் தாங்கள் ஒன்றுக்கொன்று பிறவற்றிற் கிடங்கொடாமலும் உள்ளுக்குள்ளே அனேக விகற்பந்தோடு மனம் பேதித்து வாழ்கிறார்களே, எந்தப்பற்றுதலைக்கொண்டு ஒன்றுபோலிருக்கிறார்களென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

பொண்ணாலும்பொன்னாலும்பூமியாலும்
பெருக்கவேயிச்சைகொண்டொன்றுக்கொன்று
தின்னார்களுறவாடிச்செத்தாரல்லாற்
சேர்ந்துமனமொன்றாகிச்சிறந்திட்டாரோ
கண்ணாலேபார்த்துநீசுகங்கண்டாயே
கவலைக்கேயாளாகிக்காந்திழந்துப்
புண்ணாகிப்பிறப்பிறப்பிற்புகுந்திட்டாய்நீ
பூமலர்த்தாடுணையென்றுபுகழ்வாய்நெஞ்சே. (கசு)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனால் வினை வழியே யுயி ரித்தேகத்தை விட்டினிமேற் றேக மெடுக்கிற தெந்ததேகமோ வதைத்தெரியும் படியும் இத்தேகத்தைவிடும்போது யாதொருகுறிகளுண்டோவென்றும் மனங் கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

வெண்பா.

தேகந்தனிற்பொறியுஞ்சீரம்புலன்கரணம்
ஆகந்துறக்குமப்போதந்நேரம் - போகமது

எவ்விடத்துச்சென்றதேரயேற்குங்கடவடிவம்
அவ்விடத்தைநன்ருயறி. (சு௫)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனால் வினைப்பயனுமறிந்தேன், இந்த அருமை யாகியமானிடதேகம்வந்ததுமறிந்தேன், வேதாகமபுராணசாத் திரங்களது கட்டுப்பாடு மறிந்தேன், பிறப்பிறப்பென்கிற விவ ரமுமறிந்தேன், வினைவழியே தேகமெடுக்கிற தென்னும் விவ ரத்தையும் என்றால் வினையுண்டாகிற தென்பதையு மறிந் தேன், ஒருவர்க்கொருவர் நன்மை, தீமை, உதவியில்லை யென் பதுமறிந்தேன், ஒரு குடும்பத்திலே பலஜனங்களொன்று யோற் கூடி வாழ்கிற பந்தத்தையுமறிந்தேன், எல்லாருமுள்ள படி ஒத்துக்கொண்டேன், அரனது திருவடி நிழலையடைகிற தே சுகமென் ருசைகொண்டேன், இத்தனைநாளாக வென் னை நம்பியிருந்த குடும்பத்தாரெல்லாம் இளந்தைகளாகவிரு க்கிற படியினாலே யவர்களை விட்டு விட்டால் வேறு கெதி யின்றி அவர்கள் வருந்துவ ராதலா லவர்கள் பக்குவகாலபரி யந்த மிருந்துகாக்கவேண்டுமென்று பரிதாபப்படுகின்றமை யா லதற் கொருவயனைஞ் சொல்ல வேண்டு மனங் கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

விருத்தம்.

அவரெல்லாமிருக்கவிப்போதுன்னையேம
னழைத்துவிடிலியாதுசெய்வாயழகுநெஞ்சே
யிவர்களுக்குப்பிழைக்கும்வகைதிரும்பிவந்தே
யேதுவாய்முடிப்பதுண்டோவெண்ணிப்பாரு

தவறிநீகடம்விட்டுப்போகும்போது
தான்கூடமாண்டாரோபிழைப்பில்லாமல்
அவரவர்க்குச்சிவன்றுணையென்றெண்ணிடாம
லையத்தாலிப்படியேயலைவுற்றாயே. (கசு)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனாலறியலானேன், இனிமேற் பாசபந்தத்தில் வீழ்வேனோ? திருவடியை யடையாமலிருப்பேனோ? ஆனாலின்னுங் கொஞ்சக்காலம் பொறுத்துத்தான் திருவடியை யடைவதற்கேது பண்ணிக்கொள்ளக் கூடாதோ? இப்போது தானே துணிந்து கொள்ளவேணுமோவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

காயமனவாக்குதான்றளர்ந்தபோது
கருத்தழிந்தேயுறுதியற்றுப்பாசமீறி
நேயமந்தமாய்கையினிற்பற்றிக்கொண்டால்
நெற்றிக்கண்படைத்தவர்தானினைப்பிப்பாரோ
மாயமனமேயிந்தக்காயந்தானும்
வல்லமையோவெத்தனைநாள்வாழுமோசொல்
காயமதுநிலையல்லவென்றுமுன்னோர்
கண்ணொளிமழுங்குமுன்னேகதியுற்றாரோ. ()

[மனங்கேட்குதல்.]

(அ-கை) அப்படியானாற் சாலவு மச்சங்கொண்டேன், இனி திருவடி யடைதற்குப் போந்த வழி சொல்லென்று மனங் கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

வெண்பா.

முந்திபரிபூரணமாய் முத்தியடைந்தவர்கள்
சிந்தைமகிழ்ந்தோதுஞ்சிவநூலை - யுந்தியுந்திப்
பார்த்தறிநீநன்றாய்பகுத்துப்பகுத்துநெஞ்சே
சேர்த்தறிநீயென்வசத்திற்செல். (கஅ)

[மனங்கேட்குதல்.]

(அ-ரை) அப்படியே சொல்லுகிற சில நூல்களைப்பார்த்தேன், திருவள்ளுவநாயனார் முப்பால் வைத்துக் குறள் சொன்னதிலே "துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு மில்வாழ்வா னென்பான் றுணை" என்று சொற்றனரஃதென் கொலென மனம் வினவ வதற் கறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

விருத்தம்.

யாவரிருக்குநிலையதனையவர்க்கே யதனினிலையமர,
மூவர்முதலாம்ரிஷியோர்க்கு முழுக்கத் துறந்தோர்காமி
யர்க்குந், தேவரீர்க்குந்திறமுதலாய்சிறக்கக் காட்டுங்
கண்ணொளிபோல், நாவிலிருந்தே அஞ்சனமாய்நவின்ற
மொழியென்னுபகமே. (க௯)

[மனங்கேட்குதல்.]

(அ-சை) ஆனால் முத்தி நிலையை மாத்திரம் தனிமையிற் பேசுகின்ற நூல்தானெவ்விதமாகச் சொல்லுமென்று மனங் கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்.]
வெண்பா.

தேகமெடுத்ததுவுஞ்சிந்தையுடைத்ததுவும்
போகச்சமுசாரத்திற்புக்கதுவும் — தாகமது
கொண்டுதவிர்த்ததுவுங்கூறுங்கனவெனவே
கண்டுசொல்லும்நூலதனைக்காண். (உ0)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனால் அந்த நாலும்பார்த்தேன், அதிலுள்ள பொருளைச் சந்தையற இப்படி யிருக்குமென்று தெரிந்து கொண்டாற் போதுமோ வென்று அதிவினயத்துடன் மனங் கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்.]
விருத்தம்.

அறிவுக்கேசாட்சிகொண்டு நூலைப்பேசி
அங்கத்தைத்தானழித்து அகத்தைநோக்கு
குறிவைத்தபடியிருந்துமெய்யைப்பொய்யாய்க்
குற்றமென்றேபொய்யைத்தான்பொய்யாய்க்கண்டு
நெறியுற்றேயிருவினையும்நீக்கிப்போட்டு
நேசமுடனீசனுடன்பாசம்வைத்து
பிறிவற்றுஒன்றாகிவாழலாகும்
பேதித்துப்போகாதேபேணிக்கூடே. (உக)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) அந்தப்படிதானே யனுபவிக்கிறதா? மற்றொருவருடைய சகாயமும் வேண்டி யிருக்குமா என்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]
வேறு.

புகர்ச்சமயமாகின்ற பலசமயந்தன்னிலே புகுந்தி டாமல், அகச்சமயமாகின்ற சிவச்சமயத்திச்சைக்கே ய கப்பட்டானீ, மிகப்பெரிதாம் புத்தியைநீபடைத்திருந் தும் பெரியோரைமேவிடாமல், தகைப்படவே பிறவி யென்றநோய்க்குள்ளே சிக்கித்தான்தளர்வதேனோ. ()

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனால் பெரியோர்களைச் சாரவும் வேண்டு மோ வென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

பெரியோரைச்சாராமலவர்களுக்கே யன்புசெய்து பேசிடாமல், துரியமாதீதத்திற்சிவபூஜை செய்யாமல் சுற்றிச்சுற்றி, அரியயனுங்காணாதபரசிவமென்றதையு மறிந்திடாமல், சரியென்றுவினைபயனுங்கொண்டது வே கோலமாய்ச்சாதித்தாயே. (உ௩)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனால் தெளிந்த பெரியோர்களுக்குஜகத்திலே பிரயோஜனமில்லையே, எவ்விடத்திலிருப்பார்களோ அவர்க ளைக்கண்டு தரிசிக்கலாகுமோ வென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]
வேறு.

தெளிந்ததுறவிமிகந்தனிலே தேகப்பிராரத்துவப் படிக்கு, பொழிந்தேகரணத்தனுபோகப் புவனத்திருந்

துமெச்செயலும், ஒழிந்துசிந்தைதெளிவுற்றே ஒன்றே
சிவமென்றிருப்பார்க, ளிழிந்தபேருமவரைக்கொண்டே
றுவார்களிசத்தோரே. (௨௪)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனல் இகத்தில் சஞ்சரிக்கிறதினல் பெரி
யோர்களுக்கு இடறுவராதோ வென்று மனங் கேட்க அறிவு
கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

கருவியகன்றிவ் வுலகத்தைக்கனவென்றிருக்கக்கரு
த்ததனுள், ளுருவைக்கண்டொப்புவமை யற்றுள்
ளும்புறம்புமொன்ருகிக், குருவைப்பணிந்து பூரணத்
தில் குலாவுமடியார்ஜகந்தனிலே, மருவப்பொருந்திவா
ழ்ந்தாலும்மாசற்றிருப்பார்வல்லவரே. (௨௫)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனல் விபரீதமிகுந்து வந்ததானல் அதை நீக்
கிக் கொள்ள வல்லமையுண்டோ வென்று மனங்கேட்க அறிவு
கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

முந்தவிருந்தவஞ்ஞானமூடமானசத்தியையும்,பந்
தமறவேதுணிந்து பராபரனைத்தினமுமங்கைக்கொண்டு,
சிந்தைதெளிந்தே குருபரனைச் சிவமென்றெண்ணுந்து
ணிவதனல், தொந்தமறுத்துச்சிவானந்தச் சோதியது
வாய்ச்சுகிப்பாரே. (௨௬)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) அப்பேர்ப்பட்ட பெரியோர்கள் எந்தச்சாதியாயிருந்தாலும் தொண்டுபடலாகுமோ வென்று மனங் கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

சாதிபேதந்தனைக்குறித்துத்தயங்கிமயங்கித்தளராதே
சாதியாவதெவரறிவர்சருவவுடலுமொன்றுச்சே
சாதியாவரெவரொன்னில்தன்னையறிந்துசிவமான
சாதிபெரியசாதியென்றுசாற்றுமறைகள்சத்தியமே. ()

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனால் பெரியோர்களை சாதிபிரித்து சொல்லுகிறதினாலே குற்றமுண்டோ வென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

ஞானம்பதியா விழிகுலத்தோர் நாட்டிற்பிரித்தே சாதிதன்னை, யீனசாதியாரெனவேறெயிகழ்ந்தார்முத்தர்பத்தையும், ஆனபெரியோர்தங்களையுமலரிலொன்றாய்க் குறித்துக்கொண், டீனமுறைத்தேயருநாகிலிழிந்துபோர் ஞரிகத்தோரே. (உ௮)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) இப்பேர்ப்பட்ட பெரியோர்கள் ஜகத்தோரிகழத்தக்கதாக திரிவானேன்? ஜகத்தோரிகழுவானேன்? இதனால் யாருக்குத்துன்பம் யாருக்கு இன்பமென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்.]

வேறு.

பெரியோரைப்பித்தரெனவுலகத்தோர்கள்
 பேயரென்னவிகழ்வதென்னைபிரித்துக்கேளு
திரிவார்களிச்சைபடிஜகத்தோர்பார்த்து
 தீவினையும்நல்வினையுந்திரட்டிக்கொள்வார்
சரியாச்சென்றிருவினையுமொழித்துப்போட்டு
 சச்சிதானந்தமென்றபதத்திற்சார்ந்து
துரியாதீதப்பொருளைப்பெற்றுமந்தச்
 சுயஞ்சோதியாகியேசுகமுற்றாரே. (உகூ)

[மனங்கேட்டதல்.]

(அ-கை) ஆனால் பெரியோர்களிருவினையும் ஜகத்தோருக்கு ஒப்பித்து சுகம்பெற்றார்களே, அவர்களை யிகழ்ந்த வுலகத்தாரென்னலாபம் பெற்றார்களென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்.]

பெரியோரையிகழ்ந்தவர்கள்பெற்றலாபம்
 பேசக்கேள்நெஞ்சகமேபெருமையாக
பரியேறிப்போனவன்றான்றீயில்வீழ்ந்து
 பதைத்ததுபோலடிவயற்றில்நெருப்பைக்கூட்டி
நரிவாயில்பொருள்பறிக்குமின்பம்போலே
 நகைத்திகழ்ந்தேளிவாயினரகம்புக்கு
விரிவானவெழுநரகில்விழுந்திளைத்து
 மெலிந்திடுவாரென்றுமறைவிசுந்தானே. (௩0)

[மனங்கேட்டுதல்.]

(அ-கை) ஆனால் பெரியோர்கள் மகத்துவ மிப்படியென்றுமறியலானேன், அப்படிப்பட்ட மகாத்துமாக்கள் தெரிசனங்கண்டு கொள்ளுகிறதற்கு மார்க்கமுண்டோ வென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

வேறு.

குற்றமேதுங்குறியாமல்குணமும்பலவாய்விரியாமல்
ஒத்துபொறிகள்புலனைந்துமுறவாய்நீயுமுகந்திதனை
பத்தும்பதனமாகத்தான்பட்சமிகவும்வைத்துரத்தாற்
சித்தமதனைச்சிவமாக்குஞ்சிவானந்தபோதமிதே. (௯௧)

[மனங்கேட்டுதல்.]

(அ-கை) ஆனாலெவர்களிடத்திலும் சாத்திரத்தின் கேள்விகேட்டுத்தெரியும்படிச் செய்துகொள்ளுகிறதுதானோ, அவர்களாக்கினைக்குட்பட்டு தொண்டுபண்ணவேண்டுமோவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

வேறு.

ஐயமின்றியுடல்பொருளுமாவிமூன்று
மாண்டவனேயுன்னதென்றளித்துப்பின்னுந்
துய்யகுருநாதனுக்கேயடிமையாகிச்
சொன்னபடிகேட்பதற்கேதொண்டனாகி

மெய்யனென்றேயவர்மனமுங்களிக்குமட்டும்
வேண்டினதோர் சோதனைக்குமித்திடாமல்
செய்யதிருமலரடியிற்காத்திருந்தாற்
செவியதனிலுபதேசஞ்செய்வார்தாமே. (௩௨)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனால் வெகு பிரயாசையா யிருக்கும் போலே இருக்கிறதே, சாத்திரங் கேள்விமாத்திரங்கேட்டு கொண்டு யுக்தியினாலே அனுபவித்து முத்தியடையக்கூடாதோ? குருசமுகத்தில் தொண்டுபட்டுதான் முத்தியடையவேணுமோவென்று மனங்கேட்க் அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

வேறு.

இருவினையுஞ்சமமுடைத்தேயெழுந்துவந்த
வெண்குருவாமாணிக்கவீசனார்க்கும்
குருவடிவாயம்பலவருபதேசித்த
குறிப்பைத்தானறியாயோகுருட்டுநெஞ்சே
மருவுமிந்தவுடலுக்குளுடலைக்காட்டி
வாக்குக்குவாக்கருளிமனமுமொத்து
திருவடியிலடையகுருமுகூர்த்தமல்லாற்
சிவானந்தபோதகமுந்தெளிந்திடாதே. (௩௩)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) அப்படியானால் ஞானாசாரியரிடத்தில் அனுக்கிரகம் பெற்றுக்கொண்டால் போதாதோ? சாத்திரமும் பார்க்கவேண்டுமோ வென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

வேறு.

சேறுபோல்தளதளெனவலைபூமிக்குள்
திடமானகம்பத்தைநாட்டினக்கால்
மாறுகொண்டுவிழுந்திடுமென்றதனைச்சுற்றி
முண்டுக்கல்லைக்கட்டித்துமுறைக்குமாபோல்
கூறுகின்றசாத்திரத்தின்சாட்சிதந்து
குலைந்திடாத்திடமூற்றுக்குறித்துநின்று
வீறுகொண்டுநெஞ்சேநீயனுபவித்தால்
மெய்ஞ்ஞானவீடதனில்விளங்குவாயே. (௩௪)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனால் சாத்திரம் தெரியாதபேர்கள் சற்குருவினிடமுபதேசம்பெற்று சாதித்து அனுபவமடைந்தபேர்கள் பெற்றகாட்சி நூலிலுள்ளபொருளுக்கு ஒத்துக்கொள்ளுமோ வென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

உறுதிகொண்டபிள்ளையென்றுலாசான்வைத்த
வுபதேசங்கேட்டளவிலுறுதிகொண்டே
இருதயத்தில்நாட்டினதுநழுவிடாம
லெப்போதும்குருபத்திதவறிடாமல்
மறுகவலைசாராமலூனறப்பெற்றால்
வழங்குநூல்பேசுகின்றவண்மைக்கொக்கும்
இருமைதரும்முத்தியேயடையலாகும்
கிட்டினவர்க்கேதுகுறைகேடில்நெஞ்சே. (௩௫)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனால் ஞானனுபோகம் ஒருவர்பெற்றிருந்தால் பெருதவர்கள் அந்த வனுபோகத்தைச் சொல்லென்றும் காட்டென்றும் சொன்னலவர்களுக்கு ஒத்துக்கொள்ளும்படி சொல்லலாமோ? அப்படி இப்படியென்றுங்காட்டலாமோ? ஆகிலும் மெய்ப்பொருளினிட பிரகாசத்தைப் பேசினல் மனமொத்து களிப்பார்களோவென்று மனங்கேட்க அறிவுக்கூறுகின்றது.



[அறிவுகூறுதல்.]

ஒருவர்தினவொருவர்சொரிந்தா[illegible]
வுற்றவர்க்கோசொரிந்தவர்க்கோவுற[illegible]பாரு
மருவுமந்தசொபபனத்திற்கண்ட[illegible]
மகிழ்ந்தவர்க்கோகேட்டவர்க்கோமதித்திப்பாரு
உருசியுடனறுசுவைகொண்டுண்டவர்க்கோ
உகைமையுடன்கண்டவர்க்கோவுன்றிப்பாரு
தெரிசனமுங்கண்கண்டுசிந்தையற்ற
சிவஞானமவரவர்க்கேதெளியுந்தானே. (௩௬)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனல் மெய்ப்பொருளினுடைய பிரகாசம்அவரவர்கள் கண்டுகளிக்கப்பட்டதுதானே வென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

நீதானேயறிந்தல்லோ நிலைக்கவேண்டும்
நீட்டுபவர்சொல்லுகின்றநெறியிற்சென்றாற்
போதாதுபோதாதுபொந்துக்குள்ளே
புலியிருக்குமென்றதென்னைப்புகுந்துபார்த்தால்

வேதாளமென்றதொருமயக்கந்தீரும்
மெய்யடியார்மனங்களிக்கமேவிவாழ்வாய்
வாதாடிமுத்தர்களைவிட்டிடாதே
மனமேநீயுள்ளபடிவணங்குவாயே. (நஎ)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனாற் றனித்தனியே சுகமடைவதாயிருக்க, பெரியோர்களொருவர்க்கொருவர் கூடிக்கொண்டானந்தமிகுந்தறவாடுகின்றார்களே. அஃதெவ்வித காரணம்பற்றியென மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

மறப்பானமூன்றுடலுமிழந்தமுத்தர்
மனவெளியாம்பெருவெளியில்மருவலாலே
திறப்பானவாகர்சமொன்றுந்தன்னிற்
சூரியன்றன்பிரகாசத்தோற்றம்போல
சிறப்பாகத்தேகத்திலிருந்தமுத்தர்
திருஷ்டியினாற்கலந்தொன்றாய்த்தியானிப்பார்கள்
மறைப்பானதில்லைநெஞ்சேகண்மணிக்குள்
வன்னியொளிமருவுமந்தவண்மைபாரே. (நஅ)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனாற் சாத்திரங்களிலே சரியை, கிரியை, யோக, ஞானமென்று சாற்றுகின்றதேயவற்றுள் முன் சொல்லிய முத்தொழிலுஞ் செய்து முடிந்த பின்னரன்றோ ஞானமறிய வேண்டியது. அப்போதன்றோ ஞானாசாரியர் கிருபாகடாக்ஷம் வேண்டியதென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

சரிகையமுதன்முத்தொழிலுஞ்செய்கின்றோர்கள்
சாயுச்சியமுத்திரையைப்பணியவேண்டும்
உருசியுடனமுதளித்துப்பாதபூசை
யுண்மையுடனுபசாரஞ்செய்யவேண்டும்
பரிசைகொண்டுசோதித்துநிந்தைசொல்லி
பகைத்துவிடினகைத்திடுவார்பலனேபாழாம்
விரிவுகொண்டுமயங்காதேயுற்றுப்பாரு
வீணருடன்கேள்விவிட்டுமெய்யைப்பாரே. (ங௧).

[மனங்கேட்குதல்.]

(அ-கை.) ஆனால்வ்வளவு மகத்துவமிருக்கிற படியினாலே யம்முத்தொழிலினது லாபமுஞ் சுளுவிலே யிவராலே முடித்துக்கொள்ள லாகாதோ வென மனங் கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

சாயுச்சியமுத்திரையைபடுத்துக்காத்துச்
சங்கையற்றுத்திருவுளத்துப்பார்க்குக்கொத்தால்
நீயுச்சியமாகவென்றுகிருபைநோக்கில்
நேரானமுத்தொழிலினிலாபநேர்ந்து
மாயுச்சியமாகவேயம்பலத்தான்
மலரடிக்கேயன்பாகச்செல்வாய்நெஞ்சே
பாயுச்சியமாகவேபெற்றோருண்டு
பராபரத்தையடைந்ததின்பண்பிஃதாமே. (௬0)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆறு வித்தகையவனுபவத்தை, யில்லறத்தினின்று பெற்றுள்ளெவரோனுமுண்டுகொல்லோ; அன்றேல்,துறவறம்பூண்டு, சந்நியாசியாய் பற்பல விரத வைராக்கியமும் சர்வசங்க நிவிர்த்தியுஞ்செய்து,ஜெகசஞ்சாரத்தை விட்டகன்று, ஆரணியசஞ்சார முற்று வருபவர்களின் ஞானமென்னு மறிவு பிரகாசமாகி ஸ்பஷ்டப்பட்டுளரோ வென்றும், இவர்களிலுந் தம்மனதுட் குடிகொண்ட வஞ்ஞானாந்த காரத்தை யோட்டும் வன்மையிலராகி மூடராதலுமுண்டோவென்றும் மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

சன்னியாசியானதிலுமூட்ருண்டு
சமுசாரஞ்செய்வதிலுஞானியுண்டு
முன்னுலேயேதுவாம்பிராரத்துவங்கள்
மூட்டிவிட்டுஞானிக்குமுறைதப்பாது
பின்னுலேயிருவினையுந்தொடரச்செய்து
பெற்றிடுவாராசான்றன்கிருபைகொண்டு
பின்னுபின்னங்களாலென்றெணுதே
பெருஞ்சோதிமுத்திரையைப்பேணிக்கூடே. ()

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனால் இல்லறத்திலேயிருந்தும் ஞானம் பெற்றுக்கொள்ளலாமென்கிறது சுளுவாகவிருக்கிறதே; உலகத்திலுள்ள பலரும் ஞானசிரியரிடத்தனுக்கிரகம் பெற்றுக்கொண்டு முத்தியையடைவ தருமையாயிருக்கிறதே; அதிலென்னபிரயாசையென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

யாவர்களும்பெரியோரையடுத்துக்காத்து
அவரடிக்கேபணிந்துமிகவன்புசெய்து
ஆவலுடன்பன்னிரண்டுவருடங்காத்து
மப்போதுபக்குவத்தையறச்சோதித்துத்
தேவர்முதன்மூவர்களுந்தேடிக்காணுத்
திருவடியுமுடிநடுவுந்தெரிசிக்கத்தா
னுவதனுலுபதேசஞ்செய்வார்நெஞ்சே
நல்லறிவால்வெகுபூசைநவின்றதாமே. (சூஉ)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனால் புண்ணிய மிகுந்து சிவாசாரபக்தி, நே யம், சிவார்ச்சனை, வெகுகாலஞ்செய்து பின்னே நல்லறிவுபிர காசித்திருக்கும் பேர்களுக்குப் பெரியோர்கள் தெரிசனங்கிட் டும்: அப்பேர்ப்பட்டவன் ஆசான்திருவுளத்துப் பாங்குக் கொ த்துநடந்து பரகதியடைவானென்று சொன்னது மறியலா னேன். ஆகிலும்பெரியோர்களை யடுத்து, அவர்திருவுளத்துக் குப் பாங்குபோல்நடந்து, தீக்ஷையும் பெற்றுக்கொண்டு, சா த்திரத்திலுள்ள பூட்டை அனுபோகத்துக்கும் ஒப்பும்படி தெ ரியவுங் கேள்விப்பட்டுக்கொண்டு, ஆசாரியரைக்கவனியாமல், மதங்கொண்டு, ஆசாரியார் திருவடிசூட்ட மகிழ்ச்சியில்லாம லும்,பூரண தீக்ஷையாகாமலும், தட்டிப்போகிற துண்டோவெ ன்றுமனங்கேட்க அறிவு கூறிகின்றது.

[அறிவுகூறுதல்.]

அடியருக்குத்தொண்டாவதருமைநெஞ்சே
யவரவர்க்குவிட்டகுறையடுத்தகாலம்

பிடியாமலிருப்பாரோதொட்டுக்கொள்வார்
பேதமைகளாலுலகம்பிணக்குவந்து
குடியாகுமதனாலேநழுகிப்போவார்
குற்றமறச்சற்குருவைக்குறிக்கச்சொல்லும்
விடியாதகாலத்திலிருளேயாகும்
விடிந்தபின்புகண்ணுக்குவெளிச்சமாமே. (௪௩)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) நீர் உலகவிபரீதம் வருகிறதாகவும், அதனாலே ஆசானைவிட்டு நழுகும்போது ஆசானைக் குற்றமாகக்குறித்துக்கொண்டு போகிறதாகவுஞ்சொன்னீர், அறியலானேன்; ஆகிலுமிவ்வளவிலே நழுகினாலும், இன்னொரு தேகம்புண்ணியமிகுந்த மானிடமாயெடுத்து, சடுதியிலேவிட்டகுறை முடியும்படி ஞானசாத்திரியார் கிருபையடைந்து, முத்தியடைவார்களோ வென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

இவ்வளவுந்தொட்டேகும்போதுமீண்டும்
இகபோகவிபரீதம்வந்தாலுந்தான்
அவ்வளவுந்தான்குருவின்றிருவுளத்துக்
கன்புதவறாமலேயகன்றானாகிற்
றெவ்வளவாய்விட்டகுறைதாக்குஞ்சேர்க்குந்
தேசிகனைச்சுற்றமெனிற்றெளிந்துமேலாம்
நவ்வளவாயிருந்துவிடும்பின்னுமந்த
ஞானகுருத்துரோகமும்நரகஞ்சேர்வார். (௪௪)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனால் ஞானசாரியாரிடத்தி லொத்தாப்போலி ருந்துதெரிந்துகொண்டு, ஞானகுருத்துரோகி தானேதான்றெ ளிந்தவன்போலே பேசுகிறானே, உலகத்தார்களுஞ் சிறிதுபே ர்கள் அதைக்கேட்டுமயங்கி ஒத்து வணங்குகிறார்களே அவர்க ளுக்கு மிவர்களுக்கு மென்ன லாபங்கிடைக்குமென்று மனங் கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

புலித்தோலைபசுவுரித்துப்போர்த்துக்கொண்டு
புலியென்றாற்புலியாமோவின்னுங்கேளு
பலிப்பாகப்பெண்போலேபுருடன்வேடம்
பகட்டினாலவனுருவம்பாவையாமோ
சலிப்பானநரகத்திலவீழுமாண்டர்
சற்குருவின்றன்னிடத்திற்கற்றுக்கொண்டு
நலிப்பாகப்புலிப்பாயுமியல்புபோலே
நானிலத்தோர்வணங்கினதாலீனமாச்சே. (௨ரு)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனாலவன் றானுங் குருத்துரோகியானபடியினா லே எவ்வளவுதெளிவாய் பேசினாலும் முத்திவிலக்க னென்ப துசரியே. அவன் நிச்சயவானென்று நேசிக்கிறவர்கட்கு என் னவிலாபமென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

மரப்பசுவின்முலையதனிற்பாலுண்டாமோ
மலடிக்குச்சுதனுடையமகிழ்ச்சியுண்டோ
துரத்தறியாத்தண்ணீர்ப்பாம்புதன்றலையிற்
றுலங்குமணியிரத்தினமுந் தான்றுமோசொல்

பாத்தினிடத்திலையதனைக்குருமுன்பாகப்
பதியாதமூடனையேபணிந்ததாலே
வியர்த்தமேயல்லாமலுதவிசெய்ய
விஞ்ஞானமுண்டாமோ விளங்குநெஞ்சே. (௪௬)

[மனங்கேட்டதல்.]

(அ-கை) ஆனாலறியலானேன், ஸ்ரீகட்கு ஞானம்வாராதென்றும்,புருடர்க்குமாத்திரம் ஞானமுண்டெனவ்வளதனாலே? அஃதுவிளங்குமாறு சொல்கவென்று மனங்கேட்கஅறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

அஞ்சுகின்றபெண்ணெனென்றுமாணென்றுந்தா
னஞ்சுபஞ்சபூதத்திற்பிரிந்ததுண்டோ
நெஞ்சிலுள்ளவஞ்சகங்கள் வேறுமுண்டோ
நிறம்வேறேகுணம் வேறேநேசம்வேறே
மிஞ்சுகின்றவுயிர்தானும் பெண்ணெனன்றுண்டோ
மெய்கண்டநூலதிலேபிரித்ததுண்டோ
சஞ்சலத்தாற்சொற்கேட்டுமயங்கிடாதே
சங்கையறமுன்னூலைச்சார்ந்துபாரே. (௪௭)

[மனங்கேட்டதல்.]

(அ-கை) ஆனால் பேதமையென்பது மாதர்கணிகலமென்றும் ஔவையார் கூறியதென்கொலென்றறிவுவினவ மனம் கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

ஆணுக்கும்பெண்ணுக்குமறிவொன்றேயாம்
ஆணும்பேதைகுணம்பெண்ணுக்குண்டு
வீணுக்கேயெடுத்தசென்மமனந்தங்கோடி
விவேகமுத்தியடைந்தவர்களதிலுமுண்டே

ஊனுக்குத்தேடியுண்டேயுறங்கிச்செத்த
வுலுத்தருண்டுபுருஷரிலேயனந்தங்கோடி
தாணுவினுக்கேகசராசரந்தானெஞ்சே
சற்குருவுக்கப்படியேசார்ந்துபாரே. (௪௮)

[மனங்கேட்குதல்.]

(அ.கை) ஆனாலதுவு மறியலானேன். நான் கேட்கப்பட் டசங்கைக்குச் சரியென்னும்படி சமாதானங்கொடுத்து நன்றா க வருமையாப் தெளிவுடனேயார் சொல்லப்போகிறார்கள்! இனிமேல் நடக்கவேண்டிய தென்னவென்று குதூகலங்கொ ண்டுமனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

இன்னமின்னம்பிறவிதனிற்பிறத்தனன்றோ
வினிமேலும்பிறவாமலிருக்கைநன்றோ
வுன்னுகின்றவினைவேது கருத்தங்கேதோ
வோதுகின்றவாக்கேதுசெவிதானேது
பன்னுகின்றகலையேதுபண்தானெங்கே
பாடுகின்றசத்தந்தான்தொனித்ததெங்கே
முன்னிலையாய்ஞானகுருமொழிந்ததேது
முத்திநெறியாய்மனதேமுனைந்துபாரே. (௪௯)

[மனங்கேட்குதல்.]

(அ-கை.) ஆனாலெவ்விதத்திலேயும் பார்க்குமளவில், இந் தகும்பச்சேற்றில் உழைத்துக்கொள்ளுகிறதும், அதற்கொத் தாசையா யுலகத்தார்சொல்லை விசுவாசமாய் ஒத்துக்கொள்ளு

௩

கிறதும், துக்கமேயொழிய வுள்ளபடி குடும்பத்தார் என்மேல் பிரியமாயிருக்கிறதேயில்லை. எப்படியெனில்:—நான் சிலநாள் சம்பாதனையில்லாமலும், தேகசௌக்கியமில்லாமலும், ரோகஸ்தனாகவிருக்கும்போது சர்வத்திரபேர்களும் என்மேல் மனதுசலிப்புற்றிருந்ததுகண்டேன்; ஏவல்பணிவிடையில் வெறுப்பானதுங்கண்டேன்; சாவும் பிரக்ஞைதப்பியிருக்கும்போது பெண்பிள்ளைகளை எதிர்விட்டார் ஆஸ்தியைக் கேட்கச் சொன்னதுங்கண்டேன்; அவரவர்களழும்போது ஒப்பனைசொல்லி அழுகிறவயணமுங்கண்டேன்; யெல்லாப் பொருளையிச்சித்திருப்பதென்று மறியலானேன்; எனக்கு உரிமையானபேர் ஒருவரையுங்காணேன்; அல்லது சிலது நாளுழைத்துமக்கண் முதலாகியபேர் சம்பாதிக்கசாமர்த்தியம் வருந்தனிலும் உழைத்துப்போட்டு அதன்பின் சும்மாயிருப்போமென்றாலும் என்னிச்சைப்படிநடக்கவும்மாட்டாது, அதுவுமறியலானேன்: ஆகையால் சத்துருவாகிய இந்தப் பேய்க் கூட்டங்களைவிட்டு காயந்தளராமுன் சிவன்றிருவடியடைதற்குநீசொன்னபடி சத்தியமாய்நடப்பேனென்று மனஞ்சொல்ல அறிவுகூறுகின்றது.

பணியறுத்தல் முற்றிற்று.

---

[அறிவுகூறுதல்.]

வேறு.

பொன்னிநெஞ்சமேசொற்படி கேட்கவும்பொருந்தியேநன்றாக, இன்னமின்னமும் பேதமைகொள்ளவேயேரவில்லறந்தனைவிட்டு, தன்னைத்தானறியாமலுஞ்சிவ

ண்டிசார்வதுமிழந்தாக்கால், பின்னமபின்னமாயிரண்டு
ங்கெட்டா னென்றேபேதைமைகொள்வாயோ. (௫௦)

[மனங்கேட்குதல்.]

(அ-கை.) இதனால் நான்தெளிந்தவிதத்திலே பேதைமை
யென்பதிருக்குமிடமுங்காணேன். சர்வபணியு மறந்துவிட்
டேன். ஆனால்தெளிவாய்க் கேட்பதற்குத் தெரியும்படிசெய்யு
முதவிவேண்டுமென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

சுத்தநெஞ்சமே சற்குருமலரடி தொழுவகைகேட்
பாயேல், பத்தனாகியேமானாபிமானமும்பற்றறவிட்டே
நீ, குற்றமேதுமற்றெவ்விடங்காண்கினுங்கூறுடற் களி
ப்புற்று, பற்றுமாகியேதிருவடிகெதியெனப் பண்புடன்
பணிவாயே. (௫௧)

[மனங்கேட்குதல்.]

(அ-கை.) ஆனால் மானாபிமானம்விட்டு, குருவை யெவ்வி
டங்காண்கினு மனோவாக்குக்காயம் ஒத்து, அன்புகளிகூர்ந்து
எண்சாண்தேகத்தை இருகையாக்கி, நன்மலரால் அவர்திருவ
டிக்குச்சாத்தி, தீர்க்கதெண்டம்பண்ணச்சொன்னீர், அதற்குச்
சந்தேகமில்லை. இவ்வளவுமிழந்து நான் இதற்கஞ்சவேனோ.
அப்படியே செய்வேன். ஆனால் அதிகமாக உலகத்தார் இகழத்
தக்கதாக குரு மிகுந்த அசங்கியரூபமாக விருந்தால் நான்
பணியுமளவிலேநிந்திப்பார்களே! அல்லது அவ்வாறிருக்கினும்
அப்படிதான்செய்தல் முறைமையோவென்று மனங்கேட்க அறி
வு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

வேறு.

குவலயத்தோர்சொல்கின்றகேள்வியாலே
கூசுகின்றநெஞ்சகமேகூறக்கேளு
அவலமாங்கடலுக்குளாழுமாண்பர்
அபிமானம்வந்துன்னை அண்டிற்றானால்
சவலையாய்நழுகிடுவாய்முத்திமார்க்கந்
தான்கிடைப்பதருமையதைச்சார்ந்தேநீதான்
சிவனடியையடைவதற்குசற்குருத்தன்
றிருவுளத்துக்கொத்தவழிசெல்லுவாயே. (௫௨)

[மனங்கேட்குதல்.]

(அ-கை.) ஆனால்சற்குருவின்றிருவடியில் சரணஞ்செய்வதற்குமார்க்கமுண்டோவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

ஓம்நமசிவாயவென்றவக்ஷரத்தை
உச்சிக்கண்புருவம்வாய்மூக்குநாசி
தாமசங்களில்லாமல்முக்காலுந்தான்
சற்குருவின்றிருவடியில்தானழுத்தி
நேமமாயிப்படியுஞ்செய்வதுந்தான்
நேரானசரணத்தின்தீக்ஷையாகும்
ஆம்பின்னேயென்றெண்ணியிருந்திடாதே
ஐயனுள்ளங்களித்திடவேயாசைவைப்பாய். (௫௩)

[மனங்கேட்குதல்.]

(அ-கை.) ஆனால் சரணதீக்ஷையுமறிந்தேன், செய்யவுந் துணிந்தேன், கருத்தில் செய்யும்படி குறித்தால் போதாதோ? காயத்தினாலு மிகுதியாய் வணங்கிக் கொள்ளவேணுமோவென் றுமனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

காயமனவாக்கினாலடைந்தகன்மங்
காயமனவாக்கினாற்கடக்கவேணும்
காயமனவாக்கினிலொன்றொளித்தால்
கடமெடுக்கவேதுவாங்கண்டபொரு
ணேயமுளவைம்புலனாற்சூழ்ந்ததுன்பம்
நீக்குதற்குமுறையிதுதானிலைத்துப்பார்நீ
மாயவித்தையாமென்றுநழுகிடாதே
வஞ்சகத்தைநீவிட்டுவணங்குவாயே. (௫௪)

[மனங்கேட்குதல்.]

(அ-கை.) ஆனாலப்படியேசெய்கிறேன், இன்னஞ் சற்குருதிருவுளத்துக்குப் பாங்காய் நடக்குமார்க்கங்கள் சொல்கவென்றுமனங்கேட்க அறிவுகூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

வஞ்சனைபொய்சூதுகபடங்கணீக்கி
மானவபிமானமுதற்பெருமைநீக்கி
யஞ்சுகின்றகோபமாங்கா ரநீக்கி
ஆசைபனைதப்பாதியடியோடேநீக்கி

துஞ்சவேசோதித்துப்பார்த்தாலுந்தான்
துணிவாகித்திருவடியேகெதியென்றெண்ணி
தஞ்சமென்றேயையனதுநிழல்போற்காத்து
சரணத்தினேவல்செய்துதழைத்திடாயே. (ருரு)

[மனங்கேட்குதல்.]

(அ-கை.) அப்படியே தொண்டுசெய்கிறதற்கு மாளானேன், எத்தொழிலுமில்லாமல்சர்வ ஆசையுமிழந்து நிரந்தரமாயிருக்கிறபெரியோர்களிடத்தில் தொண்டுபட்டிருந்தால், வயிற்றுப்பசிக்கு அன்னம்வேண்டியிருக்குமே யதற்கென்னவயணமென்றுமனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

வேறு.

இச்சையுடனெத்தனைநாளிவ்வுலகில் வாழ்ந்தாலுமிடரேசொல்வார், நச்சைவருமிதனாலேதெளிவுற்ற மனதென்றுநல்லோர்சொல்லார், சச்சடியைவிட்டுவிடுமுப்பொருளையோர்பொருளாய்த்தனித்துப்பாரு, பிச்சையென்னவிசாரமென்னதலைமேலேசுமந்துவரப் பெருமானுண்டே. (ருசு)

[மனங்கேட்குதல்.]

(அ-கை.) அப்படியிருக்கச் சிவசொரூபத்தைப்பெற்றிருக்கின்றபேர்கள் ஆகாரத்துக்காகப் பலவிதங்களான தொழில் செய்கிறதும், சித்துகள் வித்தைகள் செய்கிறதும், பொய்சொல்லுகிறதும், சிவசின்னவேடத்தைக் கபடாகத் தரித்துக்கொள்ளுகிறதும் என்ன? வென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவு[illegible]]

ஆணே முதலெறும்புக[illegible] [illegible]தளித்துக் காக்கு
மொருவரனேயல்லால், சே[illegible]ாக்விந்த மாணிடர்க
ள்செய்வதெல்லாஞ்செகத்தின்மாயை, ஊனேமுதல்சும
ந்தவரார் உண்டபின்பு களித்தவரார் உற்றுப்பார்க்கில்
தேனேயுண்டுருசி கண்டதிருடனேத்தான்கண்டவர்க்குத்
தெரியுந்தானே. (௫எ)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆறு லறியலானேன், பெரியோர்களிடத்தில்
பக்திவைராக்கியத்துடனே நிமிடநேரமாகிலும் பிரியாமல் சர
ணடைந் தேவலுஞ்செய்துகொண்டிருக்கிறவர்களுக்கு எந்தப
தவிகிட்டும்? என்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

வே று.

ஆசான்கிருபையிருந்ததனுலந்தவுடற்போய் மறுவு
டலில், கூசாதிருந்துந் தன்னண்டை குறையொன்றில்
லாநிறைவாக, தேசாநேசர்சூழ்ந்திருக்கத் திருவோலக்க
ஞ்சேவிக்க, ஈசாவென்றேமறைபோற்றவெய்தும்பரம
பதம்நெஞ்சே. (௫அ)

[மனங்கேட்குதல்.]

(அ-கை.) ஆனல் நிழற்போற்பிரியாமற் சரணத்தேவலுஞ்
சவியமலும் செய்கிறேன். ஐயோ? வெத்தனேபிறவியோ எடுத்
துவந்துகொண்டிருக்கிறநான் இன்னுமோர்பிறவிபிறப்பேனே?

முழுதும்பிறவாமலிருக்கிற மார்க்கமுண்டோ? அதைச்சொல்கவென்றுமனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

வேறு.

உடல்பொருளுமாவியுஞ்சற்குருநாதற்கே
வுண்மையுடனுதகத்தால் தாரைவார்த்து
நடமாடுமிம்மூன்றுமெனதென்றெண்ணு
நாயகனுஞ்சீவனேயேயடிமையாக்கு
இடவாக்குத்தவறுமல்நிலைத்துநெஞ்சே
தேகந்தானொழியளவுமுதவிசெய்தால்
படமாடுமரவத்தையணிந்தவீசன்
பதம்பெறுவாயுள்ளபடிபகர்ந்திட்டேனே. (௫௧)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) ஆனால் நல்லதாயிற்று, இதுவரைக்கும் நானே உடல், பொருள், ஆவிமூன்றுக்குமுடையவனென்று நீர் சொன்னபடிகேட்டு சருவசங்கையுமிழந்து நிருவிகாரியாய் என்னகெதியென்றுகேட்குமளவிலே சீவனுண்டென்றும் சீவனுக்கு உடல்பொருளாவி சொந்தமென்றும் அதைக் குருவுக்குத் தத்தஞ்செய்து சீவனை அடிமையாக்கி ஆசான்சொற்படி நடந்து ஓவேசனுகிறதாய்ச்சொன்னீர்; மகாசந்தோஷமாயிற்று! அப்படியே சீவன்முத்தி யடைகிறதானல் நானித்தனைப் பிரயாசப்படவேண்டியதென்ன நான்-நீயார் இவ்வளவுநான் சந்தேகமற்றுத் தெளிவுகொண்ட லாபமென்னவாகப்போகிறதென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

சீவனேநீயாகுமறிவுநீயாஞ்
சிவன்றானேநீயாகும்பரமுநீயாம்
தாவுகின்றசெயலுடனேமனதென்றன்னை
சாற்றியதோர்நாமமாஞ்சர்வசங்கை
மேவவேமொழிகிறதுமுனதால்நெஞ்சே
மெல்லமெல்லச்சொற்படியேமேவினக்கால்
நாவுதனிற்பிரிக்கின்றபேதமற்று
நாம்சிவமாய்வாழலாம்நாடிப்பாரே. (சு0)

[மனங்கேட்குதல்.]

(அ-கை.) ஆறு லறியலானேன், இனி உடல்பொருளாவி மூன்றும் குருவுக்குத் தத்தம்பண்ணச்சொன்னீர். இந்தமூன்றையுந் தெரியப்படுத்துமென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

உடலென்றாற்சடாதாரவுடலேயாகும்
உயிரானபிராணனேயாவியாகும்
இடமாகவிரண்டையுந்தானெனதென்றாற்ற
சீவனேசிற்றம்பலப்பொருளதாகும்
அடவாகவிம்மூன்றுங்கொடுத்துத்தன்னை
அடிமையெனச்சத்தியமாயிருந்தால்நெஞ்சே
இடமானகதிபெறவேயுபதேசிப்பார்
இப்படியேகுருபதத்திலிஷ்டம்வையே. (சுக)

[மனங்கேட்குதல்.]

(அ-கை) அப்படியே செய்யலுற்றேன், இனி தீக்ஷையென்பதும், நூலென்பதும், குரு சொல்லென்பதும், சாதகமென்பதும், முத்திவீடு என்பதும், தெரியச் சொல்கவென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

தீக்ஷையது நூலாகும் நூல்விளக்காம்
  திறமானசற்குருசொல்லுபாயமாகும்
தாக்குகின்றசாதகந்தானேணியாகும்
  சமையென்றவெளிதானேவீடதாகும்
மார்க்கமென்றதிதுநெஞ்சேமுன்னோர்கூட
  வாழ்ந்தவருமிப்படியேமருவிப்பாரு
நோக்கையிலேயிதிலொன்றுகுறைவிற்றானல்
  நொந்துநொந்து பிறவியினிலுழைக்கும்பாரே. ()

[மனங்கேட்குதல்.]

(அ-கை) எல்லாம் உள்ளபடியென்றறிந்துகொண்டேன், இனிமேல் சற்குருவினுடைய திருவுளமகிழ்ந்து நான் கடைத்தேறும் பொருட்டாய் உபதேசஞ் செய்யும்படி சொல்கவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவுகூறுதல்.]

அப்படியேசெய்விப்போமழகுநெஞ்சே
  யாசான்றன்றிருவடிக்கேயன்பதாக
வெப்படியாகிலுமுன்னைமாயைகிட்டி
  யிதம்போலாம்ஜெனனமதற்கிடங்கொடாதே

செப்படிபோல்வுந்தொரு ஜெனனநீங்கி
　சிவானந்தபோதகமாய்த்தெளிவாய்நீயும்
மைப்படியுங்கன்னிபங்கன்குருவாய்வந்து
　வரதனையைத்தீர்த்திடுவார்வணங்குவாயே. (௬௩)

[பொதுகவனிப்பு.]

(அ-கை) இதுவரையிலுஞ் சீவனைப்பின்னிட்டு, மனதை முன்னிட்டு, சற்குருவை பின்னிட்டு, அறிவு முன்னிட்டுக்கொண்டு மனத்தினுடைய பணியறுத்து சற்குருகடாக்ஷம் பெற்றுக்கொள்ளும் வகை கூறினது; இனி மனதைப் பின்னிட்டு ஜீவனை முன்னிட்டு ஜீவனுக்குள் மனமொடுங்கி முத்தியடையத்தக்கதாக அறிவைப் பின்னிட்டு சற்குருவைமுன்னிட்டு அறிவைச் சீவனுக்குப்போதித்து நீ நானென்று இரண்டில்லாத பரிபூரணமாய் ஆக்கும்பொருட்டு ஜீவனுக்குக் குரு சிவானந்தம் போதிக்கு மார்க்கம் கூறுகின்றது.

[ஜீவன் சொல்லுதல்.]

ஆதியேயந்தமேயருமையான
　வருட்கடலேயையனேயகண்டமுற்ற
சோதியேசொரூபமேசுகத்தைக்காட்டும்
　சுத்தனேசித்தனே சுயம்பிற்பொங்கும்
பாதியேபரமனேபாரின்மீதே
　பரம்போகச்சுந்தரமாயெழுந்துவந்த
நீதியேயென்னுடையபிறவிநீக்கும்
　நிச்சயமேதிருவடிக்குச்சரணென்றேனே. (௬௪)

[குரு சொல்லுதல்.]

தீக்ஷைமுறையாகவேசரணஞ்செய்த
செல்வனேஞானமென்றதீறம்பெற்று
பாக்கியமாய்மெய்ப்பொருளைக்கொள்ளவேண்டிப்
பாரினிலேவெகுபேர்கள்பதைத்துவந்தார்
பாக்கியத்தாற்சிதறினார்சிலதுபேர்கள்
பாழ்மனத்தாற்சிதறினார்சிலதுபேர்கள்
தாக்கியதோர்சாதகத்தில்தாளாமற்றான்
தவறுண்டேபோயினார்சங்கையுற்றே. (சுரு)

சங்கையதுவிட்டாற்போற்றொண்டுபட்டு
சாத்திரத்தின்பூட்டுகளைத்தெரிந்துகொண்டு
மங்கள்மாய்தீக்ஷைதனைப்பெற்றுநன்றாய்
வையகத்தின்சுழலினிலேமயங்கிச்சென்று
பங்கமாயபிமானத்தொழிலேசெய்து
பதுங்கினார்குருமுகத்துக்காகாமற்றான்
திங்களணிசடையார்தன்பாதஞ்சேர
தீவினையில்மெலிந்திட்டார்சிலதுபேர்கள். (சுசு)

அப்படியேநீநழுகித்தடத்தைவிட்டே
யம்பலத்திற்கேகாமற்காலன்பாசந்
தப்பவகையறியாமற்பிறவிதன்னிற்
சாருவையோநிலைகொண்டுசாதிப்பாயோ
ஒப்பவேயுடற்பொருளுமாவிமூன்று
மூலகத்தால்தாரைவிட்டுவுனைநாமென்று

செப்பவுந்தானுவிழுந்தேயடிமையாகிச்
சிந்தையுற்றுச்சிவமாகிவாழ்க்நீயே. (௬எ)

[ஜீவன் சொல்லுதல்.]

பாக்கியங்கள்பெறவேண்டி குருவடிக்கு
பதறியேவந்தொருபாரிலுள்ளோர்
வாக்கினால்மனத்தாலுஞ்சாதகத்தின்
வருத்தத்தாற்சிதறினபேரரானையா
நோக்கினத்திற்றவருமற்பிடித்துமுத்தி
நுண்ணறிவாற்பூரணத்தையடைந்ததாரோர்
தாக்கியதோர்மைந்தர்களையறியச்சொல்லும்
தயாபரனேகுருமூர்த்திசொல்வாய்நாதா. (௬அ)

[குரு சொல்லுதல்.]

எத்தனையோமைந்தர்களைப்பெற்றேனப்பா
வெடுத்துரைப்பேன்மதலையேயின்பமாக
பத்திவைராக்கியமுநழுகிடாமல்
பாரிலுள்ளோர்தங்களுக்குச்சொந்தமாக
முத்திபெறுமனக்கண்ணும்பிரகாசித்து
மூதறிவால்தத்துவத்தைமுழுதுமாள
சத்துசித்தானந்தமுமாய்ப்பூரணத்தைச்
சார்ந்திட்டான்குழந்தையென்றதங்கந்தாமே. ()

ஆமென்றேவந்தவர்களின்னமுண்டு
அவரவர்க்குத்தீக்ஷைவைத்தோமன்பதாக

ஓமென்றமுத்திநெறிக்கொவ்வுவாரோ
  ஓதுங்கியேபதுங்கியேயாடுவாரோ
நாமென்றவகங்கொண்டுநழுகிப்போறார்
  நாதனையேதூஷித்துநலம்பெறாமல்
போமொன்றேதள்ளவில்லையவர்கள்தானே
  பொல்லாங்கைக்குறித்தல்லோபோய்விட்டாரே.
நிலைக்கவென்றுவந்தவரில்தவறிப்போன
  நெஞ்சகரைச்சொல்லக்கேள்நினைவாய்நீயு
மூலகருத்திக்கைப்பிடித்துப்பாலுண்ணாமல்
  மூடத்தால்நானென்றமகத்தையுற்று
கலைகருத்தில்லாமற்சாதிக்காமல்
  கற்றபொருள்போதுமென்றேபெருமைகொண்டு
கொலைகளவாம்வஞ்சகத்தைவிடாமற்றானே
  குலைந்திட்டான்வைத்தியலிங்கன்குருநான்றானே.

[ஜீவன் சொல்லுதல்:]

அப்பனேமைந்தர்கள் தன்றிறத்தைக்கேட்டு
  அறிந்திட்டேன்முத்திபெற்றோர்க்கடியேன்றானே
செப்பமாஞ்சரணங்கள்கோடிசெய்தேன்
  சிதறினவர்பால்மனமுஞ்சொல்லவொட்டேன்
கொப்பெனவேயெனையாளவிங்குவந்த
  கொற்றவனேயுனைப்போலத்துலக்கங்காணேன்
இப்பவேயடிமைகொண்டுகாக்கவேண்டி
  இரங்கியேயருள்புரிவாயெந்தன்கோவே. (எ௨)

அறிவாளனாகியேபணிய றத்து
அச்சங்களெல்லாந்தானறுத்துப்போட்டு
குறியாளனுகவேதுணிந்துவந்த
கொடும்பாவியெனையாளக்கூச்சமென்றே
தறியாளனின்றவுலகத்தேதான்
சங்கையதுவந்தாலுந்தாளமாட்டேன்
முறியாளவந்தகுருநாதாவுந்தன்
முகிழ்மலர்த்தாள்கெதியென்றுமுனைந்திட்டேனே.

[தூப சொல்லுதல்.]

நிலமதனைச்சலத்தினாற்சுத்திசெய்து
நிராமயமாங்கணபதியைநாட்டிவைத்து
பலமுடையசோதிமலர்சாத்திமிக்கப்
பரிவானபுகைதூபங்காட்டிப்பின்னுந்
தலமுடையவெளியதனைநிவேதனஞ்செய்
சரணஞ்செய்யென்மகனேயுபதேசிப்போம்
பிலமுடனேயிடம்வலமாய்ச்சுற்றிவந்து
பெருவிரலைப்பற்றிக்கொள்பேரின்பத்தே. (எச)

அன்புடனேயுடல்பொருளுமாவிமூன்றும்
அறுதியாயளித்துவிட்டுநீதானையா
தென்புடனேயடிமையெனச்சத்தியஞ்செய்
சிதறாமல்நில்லப்பாதீக்ஷைவைப்போம்
பின்புந்தன்செவிதானேயோனியாக
பேசுமெந்தனுவுதானிலிங்கமாச்சு

இன்பமுடனனுபோகத்திருக்கவென்றே
இருசெவியிலுபதேசமேற்றுவோமே. (எரு)

[ஜீவன் சொல்லுதல்.]

அப்படியேபஞ்சசுத்திபூசைசெய்தேன்
அழகாகச்சரணங்கள்பிரகாரஞ்செய்தேன்
செப்பினதோர்பெருவிரலைப்பற்றிக்கொண்டேன்
தேகமுடன்பொருளாவிதத்தந்தேன்
ஒப்பதுவாயானுமேயடிமையானேன்
யுகமுழுகத்தடைவரினுமசையாதிற்பேன்
தற்பரனேதீக்ஷைசெய்யுங்கருணைவைத்து
சற்குருவேதிருவடியிற்சரணென்றேனே. (எசு)

[குரு சொல்லுதல்.]

வேறு.

ஞானமென்பதில்நால்வகையுண்டதை நாமுரைத்திடக்கேளாய், தானமுற்றனர்சரியையுங்கிரியையுஞ்சாருமேசிவயோக, மோனமுற்றமெய்ஞ்ஞானமே நான்கதாமுடிவதைப்பெறுவாயே, யீனமற்றவென்மைந்தனேயுன்னிடவின்பமேதுரைப்பாயே. (எஎ)

[ஜீவன் சொல்லுதல்.]

தேசிகாவிந்நால்வகையென்றதை தெரியவுமுரைத்திட்டால், மோசமாயின்பமுற்றிருப்பது தனைமொழிந்திடுமெனக்கேட்பேன், ஆசையற்றதாயிருந்திடிலுமைத்

திட வதிசயங்கொள்வேனன், நேசமுற்றதிறப்பத்தியே யுரைத்திடில்நிலைத்திடுமையாவே. (எ௯)

[௫௫ சொல்லுதல்.]

அங்கசுத்தியுமாலையந்தொழுவதுஞ்சரியை யென்றறைவார்கள், மங்களத்துடனட்டமாசித்தியும் வரையுஞ்சக்கரபூசை, பொங்கமானதுகிரியையாம் வாயுவையிரண்டிடாதிழுத்திட்டு, தங்கிநின்றதோர்யோகமென்றிதனையேசாற்றிடுமறைதானே. (எ௯)

ஞானமேதெனக்கேட்டிடின்தத்துவ நானென்னவுணர்ந்திந்த, ஊனைநானெனவுரைத்ததையகன்று பின்னொழிவறத்தனைக்கண்டு, மானம்வெட்கமுந்துக்கமுங் கவலையும் வஞ்சனைதான்போக்கி, யீனமற்றுநான்சிவமெனத்துணிந்தது மிழந்ததுமுடிவாமே. (அ0)

[ஜீவன்கேட்க ௫௫சொல்லுல்,]

இந்தநாலினிலின்பமுற்றிருக்கையி லிச்சடம்விழுந்திட்டால், தொந்தமானதோர்பலனென்ன தெரிந்திடச்சொல்லுவாய்குருமூர்த்தி, சொந்தமாகவே கேள்மகனேயதன்சுகமதையறிவிப்போம், தந்தனங்களாய்விடாமலே கேட்பதுசரியென மகிழ்ந்தேனே. (அக)

சரியையென்பதுகுறைவறச் செய்துமேதன்கடம் விழுந்திட்டால், கிரியைசெய்யவேயெடுத்திடுங்கடமது கிரியையுமுடிந்தேகில், உரிசையாகியயோகமே செய்ய

வுமுட்டெலடுத்துழைக்குங்காண், பரிகொள்யோகமு மு
ற்றவுமுடிந்துடற்பாரினிலுருவாமே. (அஉ)

ஞானமேபெறவெடுத்திடுமவ்வுடல்நழுகிடாதுனை
த்திட்டா, லீனமாகிபசெனனமும்போக்கிடுமீசனே தா
ஞகி, வானமுற்றதோர்சச்சிதானந்தமாய் வாக்குனைக்
கெட்டாத, மோனமுற்றுதானெங்குமாய் நிறைந்தது
முத்தியென்றுணர்வாயே. (அங)

[ஜீவன் சொல்லுதல்.]

அப்பனேயென்னையடிமையாக்கொண்ட வோரபூகு
ள்ளகுருமூர்த்தி, தப்பிவகெதிவேறெனக்கில்லைநின்ரு
ளதுகெதியென்றேன், ஒப்பவேசிவஞானமுமுணர்த்தி
டிலுகந்ததி லூன்றிக்கொண், டிப்பவேபரவீடதிலேகு
வனீசனேயருள்வாயே. (அச)

[குரு சொல்லுதல்.]

வேறு.

தத்துவமேயுடல்தானெனுமானதுதன்னையறிந்தி
டுநீ, சித்ததுவாயபிராணனிரானதில் திரண்டதைக்க
ண்டிடுநீ, கற்றுமேகாணுக்கண்மணியானதை கண்டு
தெளிந்திடுநீ, முற்றுசிவானந்தபோதகமானதுமுத்தியு
மிதுதானே. (அரு)

வேறு.

அறிவுபோதகமென்றநூலைப்பாரு
அதற்குமுன்னேஉடலறியும்விளக்கம்பாரு

பிறிவின்றிமேவின்றிமறைப்புமின்றிப்
    பேரின்பவமுதமழைபெய்தநூல்தான்
நெறிகொண்டவந்நூலையிசைந்துபாரு
    நிலைக்கவேயப்படியேதீக்ஷைவைப்போம்
பொறிவிட்டுசபைபுகுவாய்பிக்கோயில்லை [ள்ளே.
    பெரும்பொருளைக்கைக்கொண்டுபிழைத்துக்கொ

[ஜீவன் சொல்லுதல்.]

அப்படியேபோதிக்கமுத்திபெற்றேன்
    அரியயனுங்காணுதவடிவுங்கண்டேன்
தப்பியேயிளைக்காமற்பிழைத்துக்கொண்டேன்
    சஞ்சலத்தையிழந்துநான்சுகத்தைப்பெற்றேன்
ஒப்புவமைசொல்லவொருவரையுங்காணேன் [ன்
    உனைப்போலேதெளிவுரைக்குங்குருவுங்காணே
செப்பவோநாவிழந்தேன்பரமானந்தத்
    தீவிலேசேர்ந்திட்டேன்வாழ்ந்திட்டேனே.(அஎ)

ஞானியென்றபெயர்களையேகண்டுகொள்ள
    நல்லதொருகண்பெற்றேன்பேசவென்று
லீனமறச்சொற்கற்றேன்சிரவணத்தால்
    ஏகாந்தபரகவனமெய்தலானேன்
மானமற்றவடியருடனுசைகொண்டேன்
    மருவுமுடல்குருவுக்கேவணங்கிப்பெற்றேன்
தானமுற்றேன்சிவானந்தந்தனிலேநின்றேன்
    சச்சிதானந்தனென்றேதழைத்திட்டேனே. (அஅ)

வாழ்வுமுதற்சம்பத்தைமதித்திடாமல்
மலைமேலேயேறினதோர்பறவையானேன்
தாழ்வுகளாயுலகோர்சொல்நிந்தையெல்லாம்
சகாயமென்றேயெண்ணிச்சந்தோஷமானேன்
வீழ்வதருநரகிலுள்ளமாண்பர்க்கெல்லாம்
வீழாமலேமனிதர்மேலுமானேன்
ஏழுலகும்மேலேழும்நானேயானேன்
ஏகாந்தத்தீவினிலேயிறங்கினேனே. (அகூ)

[குரு சொல்லுதல்.]

மைந்தனேயுனைப்போலவோடிமெள்ள
வாதனையேதீர்ந்துமதிமயங்கிடாமல்
பந்தமறுத்தேபின்புகுருவைத்தேடி
பரமாகிவாழ்ந்தவர்களுண்டோவப்பா
சிந்தையற்றபெரியோரைவணங்கிக்கொள்ளு
சிவஞானிதன்னுடனேநேசஞ்செய்தே
எந்தனையேபெற்றவனேயப்பாவப்பா
வெடுத்தணைத்தேயம்பரத்திலிருப்போம்நாமே. ()

[ஜீவன் சொல்லுதல்.]

வெண்பா.

மறந்தேனோர்வார்த்தைமகிழ்ஞானமூர்த்தி
துறந்தேனினித்தெரியச்சொல்வாய்-சிறந்திலகு

பத்திசெய்வோருக்குப்பலனேதனைக்கெடுக்கும்
குத்திரருக்கென்னகுணம். (௬௧)

[௬௫ சொல்லுதல்.]

விருத்தம்.

எண்ணிலாத்தலங்களியாகங்கள் செயினுமீஸ்வர
விஷ்ணுவாலயங்கள், பண்ணுலாக்கவிதை பாடினும
னேகம்பாரினில்வரும்பலனேது, கண்ணுலாவியகற்சுரு
தி மெய்ப்பொருளைக் கண்டரனடியாருக், குண்ணலா
மெனவமுதளித்தவனடைபல னுரைக்கவுமுடியாதே ()

வேதமாகமசாத்திர புராணங்கள்விரிந்தநூலறிந்தி
டாவிந்து, நாதமேயுருவாமத்விதானந்தஞானமேபெற்
றிடவேண்டின், ஓதவல்லவர்சத்துச் சித்தானந்தமுற்ற
நல்லடியோர்க்குப், பாதபூஜைகளடங்கலுஞ் செய்தவர்
பலனுரைக்கடங்காதே. (௬௩)

கலித்துறை.

அன்னமளிப்பாரைக்கலைப்பாருமிந்தவவனிமிசை
பின்னலவர்க்குட் புரிவார்வினைப்பாரிகழ்ந்திடுவார்
மன்னவராயிருந்தேமதிப்பாரையுமறவியினி
யென்னென்னவேதனைசெய்வான்முடிவிலியம்பரிதே ()

சிவனருள்பெற்றுயர் மேலோர் தமக்குஞ்சிவனையு
ன்னித், தவஞ்செயுமன்பர்க்குஞ்சிவவேடம்பூண்டதன்

னியர்க்கு, மூவந்தேபணிபுரிவார்மேலுலக ருண்மைய
தாய், அவஞ்செய்தவனையிகழ்வோரடைவரருநரகே. ()

பெரியோர்க்குத்தொண்டுசெய்வாரைத்தடுத்திடும்
பேதையரும், சரியாதி நிலைசார்ந்தவர்க்கல்லல் சமைப்
பவரும், பரிவானதீட்சைகொண்டோரை மறிக்கும்பா
தகரும், எரிவாய்நரகத்தெண்ணிற் றுயரிலிருப்பரொன்
றும். (௬௬)

வெண்பா,

இந்நூலைப்பார்ப்போர் எடுப்போர்படிப்போர்
நன்னூலெனமனதினாடுவோர்-பொன்னூற்
படியேறித்தாண்டிப் பவசாகரத்தைக்
கடவுளக்கு முன்னிற்பர்காண். (௬௭)

சந்தேகமாதிகளைச் சாரமலேயகற்றிப்
பந்தபாசங்களைப் பாழாக்கும் - இந்நூல்
எந்நாளும்மழியா யேகாந்தவீடதனைச்
சொந்தமாக்குமெனவேசொல். (௬௮)

கலிவிருத்தம்.

அரனங்கிரிவாழி யம்பிகைதாள்வாழி
பெருமான்பதம்வாழி பின்னைசரணம்வாழி
பரமேட்டியடிவாழி பாரதிபாதம்வாழி
கரிமுகன்கழல்வாழி கந்தன்திருவடிவாழியே. (௬௯)

கொச்சகம்.

வான்வாழிவானைபளி மாதவரும்வாழி
கோன்வாழி தருவாழி குவலயத்தோர்வாழி
ஆன்வாழியமரர்முத லிருடிசித்தர்வாழி
நான்நீயெனகமற்ற நாதாக்கள்வாழி. (க00)

சிவானந்தபோதம் - முற்றிற்று.

---

சற்குருவேதுணை.

---



உ

வேலுமயிலுந்துணை.

# இப்போதச்சிட்டிருக்கும்

சுத்தப்பிரிதிகளாவன:—

———:0:———

| | |
|---|---|
| சுப்பிரமணியபண்டிதர் ஜீவரக்ஷாமிர்தம் - | ச—0—0 |
| பாலகாண்டமூலமும் உரையும் - - - | ரு—அ—0 |
| பெரியபுராணம் (செய்யுள்) - - | ரு—அ—0 |
| திருவிளையாடற்புராணம் (செய்யுள்) - - | உ—0—0 |
| வமலராமாயணமென்னும் ஞானவாசிட்ட வசனம் | க—அ—0 |
| வள்ளலார்சாத்திரம் - - - | க—அ—0 |
| திருமந்திரம் - ரு௲ - - - | க—அ—0 |
| ஞானப்பிரகாசதீபிகை உ-(அண்டகோளபடங்கள்) | க—ச—0 |
| மேற்படி ஆப்பவுண்டு - - | க—0—0 |
| பாடுதுறை - - - - | 0-கஉ—0 |
| கர்ப்பூராதிச் சுருக்கம் - - - | 0—க0—0 |
| குமாரதேவர்சாத்திரம்-கசு உள்ளது(காலிக்கோ) - | 0—க0—0 |
| மேற்படி ஆப்பவுண்டு - - | 0—அ—0 |
| விஷ்ணுதலமான்மியச் சுருக்கம் - - | 0—அ—0 |
| சடாட்சரமாறல் சு-யந்திரங்களுடன் - - | 0—உ—0 |
| கைவல்யம் மூலம் - - - | 0—உ—0 |
| அஷ்டோத்திரம் - - - - | 0—க—0 |
| புசுண்டர்உபநிடதம் (ருஉ) - - - | 0—0—சு |
| கந்தர்சஷ்டிகவசம் - - - | 0—0—சு |

இவை சிதம்பரம் மேல்கோபுரமண்டப புத்தகஷாப்பிலும், சென்னை மநோன்மணிவிலாச அச்சுக்கூடத்திலும் பெற்றுக் கொள்ளலாம். கோ-லோகநாதமுதலியார்.

உசு-நெ. ஆயலூர் முத்தியாமுதலியார் வீதி சென்னை.